*86. யா அல்லாஹ் நற்பண்புகளின் பால் எனக்கு வழிகாட்டுவாயாக! நற்பண்புகளின் பக்கம் வழிகாட்டுபவன் உன்னை அன்றி யாரும் இல்லை. இன்னும் தீய பண்புகளை என்னை விட்டும் நீக்கிவிடுவாயாக! என்னை விட்டும் தீய குணங்களை நீக்குபவன் உன்னை அன்றி யாரும் இல்லை. (நூல்: முஸ்லிம்)*

*87. யா அல்லாஹ் உன் கோபத்தை விட்டும் உன் திருப்தியைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன். உன் வேதனையை விட்டும் உன் மன்னிப்பை கொண்டு பாதுகாவல் தேடுகிறேன். உன்னை கொண்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நான் உன்னை முழுமையான முறையில் புகழ முடியாது. உன்னை நீயே புகழ்ந்து கொண்டது போன்று நீ இருக்கிறாய். (நூல்: முஸ்லிம்)*

*88. யா அல்லாஹ் ஈமானில் சுகத்தையும், நற்குணத்துடன் ஈமானையும், வெற்றி தொடர்ந்து வரும் ஈடேற்றத்தையும், உன்னிடமிருந்து அருளையும், ஆரோக்கியத்தையும், மன்னிப்பையும், பொருத்தத்தையும் நான் கேட்கிறேன். (நூல்: முஃஜமுல் அவ்சத்)*

*89. யா அல்லாஹ் துக்கம், கவலை, இயலாமை, சோம்பல், கோழைத்தனம், கஞ்சத்தனம், கடன் மிகைத்தல், மனிதர்களின் கெடுபிடி ஆகியவற்றை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (நூல்:அபூதாவூத்)*

*90. அல்லாஹ் தூய்மையானவன் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். இன்னும் அவனை புகழ்கிறேன். திரும்புதலும், சக்தியும் அல்லாஹ்வைக் கொண்டே தவிர இல்லை. அல்லாஹ் எதை நாடுகிறானோ அது உண்டாகும். எதை நாடவில்லையோ அது உண்டாகாது. நிச்சயம் அல்லாஹ் அனைத்து வஸ்துக்களின் மீதும் சக்தி பெற்றவன். இன்னும் அனைத்து பொருட்களையும் தன் அறிவால் சூழ்ந்துள்ளான் என்பதையும் நான் அறிவேன். (நூல்: அபூதாவூத்)*

91. اَللّٰهُمَّ مَــــا أَصْبَحَ بِي مِنْ نِعْمَةٍ أَوْ بِأَحَدٍ مِنْ خَلْقِكَ فَمِنْكَ وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ فَلَكَ الْحَمْدُ وَلَكَ الشُّكْرُ (اِبْنُ حِبَّان)

92. اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِأَنَّ لَكَ الْحَمْدَ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ الْحَنَّانُ الْمَنَّانُ بَدِيْعُ السَّمٰوَاتِ وَالْأَرْضِ يَا ذَا الْجَلَالِ وَالْإِكْرَامِ يَا حَيُّ يَا قَيُّوْمُ (ابن حبان)

93. اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِأَنِّي أَشْهَدُ أَنَّكَ أَنْتَ اللهُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ الْأَحَدُ الصَّمَدُ الَّذِيْ لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ (ترمذي)

94. رَبَّنَا عَلَيْكَ تَوَكَّلْنَا وَإِلَيْكَ اَنَبْنَا وَإِلَيْكَ الْمَصِيْرُ ۝ رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِّلَّذِيْنَ كَفَرُوْا وَاغْفِرْ لَنَا رَبَّنَا ۚ إِنَّكَ اَنْتَ الْعَزِيْزُ الْحَكِيْمُ

*91. யா அல்லாஹ்! எனக்கும் உன் படைப்புகளில் யாருக்கெல்லாம் நிஃமத்துகளில் இருந்து காலையில் கிடைத்ததோ அது அனைத்தும் உன்னிடமிருந்து கிடைத்ததாகும். உன் ஒருவனைக் கொண்டு மட்டும் தான் கிடைத்தது உனக்கு எந்த இணையும் இல்லை. உனக்கே அனைத்து புகழும், நன்றியும் உனக்கே உரித்தானது. (நூல்: இப்னு மாஜா)*

*92. யா அல்லாஹ்! மிக அதிகம் இரக்கம் காட்டும், மிக அதிகம் கொடை கொடுக்கும், வானம், பூமியை முன்மாதிரி இன்றி படைத்த கண்ணியமும், மகத்துவமும் உடையவனே, உயிருள்ளவனே, நிலையானவனே, உனக்கு யாரும் இணை இல்லை. நீ ஏகன், உன்னை அன்றி தேவைகளை பூர்த்தி செய்பவன் யாரும் இல்லை. நிச்சயம் அனைத்து புகழும் உனக்கே உரியது. (என்று கூறி) உன்னிடம் நான் வேண்டுகிறேன். (நூல்: இப்னு ஹிப்பான்)*

*93. யா அல்லாஹ்! நிச்சயமாக நீயே அல்லாஹ். தேவைகளை பூர்த்தி செய்பவன் உன்னையன்றி யாரும் இல்லை எவனுக்கு நிகர் யாரும் இல்லையோ எவராலும் பெறப்படவும் இல்லையோ எவரையும் பெற்றெடுக்கவும் இல்லையோ அப்படிப்பட்ட தேவையற்றவன் ஏகனான (நீயே அல்லாஹ்) என்று நான் சாட்சி பகிர்கிறேன் (என்று கூறி) உன்னிடம் நான் வேண்டுகிறேன். (நூல் திர்மிதி)*

*94. எங்கள் இறைவா! உன் மீது நாங்கள் பரிபூரணமாக நம்பிக்கை வைத்திருக்கிறோம். உன் பக்கமே நாங்கள் மீளுகிறோம். உன் பக்கம் தான் ஒதுங்கும் இடம் இருக்கிறது. எங்கள் இறைவா! காஃபிரான மக்களுக்கு சோதனை பொருளாக எங்களை நீ ஆக்கி விடாதே! எங்கள் இறைவா! எங்களை மன்னிப்பாயாக! நிச்சயமாக நீ அனைத்தையும் மிகைத்தவனாகவும், ஞானமுடையவ னாகவும் இருக்கிறாய். (60: 4,5)*

95. رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِاِخْوَانِنَا الَّذِيْنَ سَبَقُوْنَا بِالْاِيْمَانِ وَلَا تَجْعَلْ فِيْ قُلُوْبِنَا غِلًّا لِّلَّذِيْنَ اٰمَنُوْا رَبَّنَآ اِنَّكَ رَءُوْفٌ رَّحِيْمٌ

96. رَبِّ اَوْزِعْنِيْٓ اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِيْٓ اَنْعَمْتَ عَلَيَّ وَعَلٰى وَالِدَيَّ وَاَنْ اَعْمَلَ صَالِحًا تَرْضٰهُ وَاَصْلِحْ لِيْ فِيْ ذُرِّيَّتِيْ ، اِنِّيْ تُبْتُ اِلَيْكَ وَاِنِّيْ مِنَ الْمُسْلِمِيْنَ

97. رَبِّ اَوْزِعْنِيْٓ اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِيْٓ اَنْعَمْتَ عَلَيَّ وَعَلٰى وَالِدَيَّ وَاَنْ اَعْمَلَ صَالِحًا تَرْضٰهُ وَاَدْخِلْنِيْ بِرَحْمَتِكَ فِيْ عِبَادِكَ الصّٰلِحِيْنَ

98. رَبَّنَا لَا تُؤَاخِذْنَآ اِنْ نَّسِيْنَآ اَوْ اَخْطَاْنَا ۚ رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَآ اِصْرًا كَمَا حَمَلْتَهٗ عَلَى الَّذِيْنَ مِنْ قَبْلِنَا ۚ رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهٖ ۚ وَاعْفُ عَنَّا ۗ وَاغْفِرْ لَنَا ۗ وَارْحَمْنَا ۗ اَنْتَ مَوْلٰنَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكٰفِرِيْنَ

*95. எங்கள் இறைவா! எங்களையும் எங்களுக்கு முன் ஈமானுடன் சென்று விட்ட எங்கள் சகோதரர்களையும் மன்னிப்பாயாக! ஈமான் கொண்டவர்களுக்கு எதிராக எந்த கசடையும் எங்கள் உள்ளத்தில் நீ ஆக்கி விடாதே! எங்கள் ரப்பே! நிச்சயமாக நீ மிகவும் இரக்கமுடையவனாகவும், கருணையாளனாகவும் இருக்கிறாய். (59:10)*

*96. என் ரப்பே! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் நீ கருணை புரிந்தாயே அந்த அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்த அருள் புரிவாயாக! உன் திருப்தியை அடையக்கூடிய சாலிஹான அமல்களைச் செய்யவும் எனக்கு அருள் புரிவாயாக! என் பிள்ளைகள் விஷயத்தில் எனக்கு இணக்கத்தை ஏற்படுத்துவாயாக! நிச்சயமாக நான் உன் பக்கமே தவ்பா செய்து மீளுகிறேன் நான் முஸ்லிம்களில் உள்ளவனாக இருக்கிறேன். (46:15)*

*97. என் ரப்பே!நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் நீ கருணை புரிந்தாயே, அந்த அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்த அருள் புரிவாயாக! உன் திருப்தியை அடையக்கூடிய சாலிஹான நல் அமல்களைச் செய்யவும் எனக்கு அருள் புரிவாயாக! உன் அருளால் என்னை உன் நல்லடியார்களின் கூட்டத்தில் சேர்த்து அருள் புரிவாயாக! (27:19)*

*98. எங்கள் இரட்சகனே! நாங்கள் மறந்து விட்டாலும் தவறிவிட்டாலும் நீ எங்களைப் பிடித்து விடாதே! எங்கள் ரப்பே! எங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நீ சுமத்தியது போல் வலுவான சுமையை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்கள் ரப்பே இன்னும் எதை தாங்கும் சக்தி எங்களுக்கு இல்லையோ அதை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்கள் பாவத்தை அழித்து விடுவாயாக! இன்னும் எங்கள் பாவங்களை மறைத்து மன்னித்து விடுவாயாக! இன்னும் எங்கள் மீது இரக்கம் காட்டுவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன். ஆகவே நிராகரிப்போர் மீது வெற்றி பெற எங்களுக்கு உதவி செய்வாயாக! (2:286)*

99. رَبَّنَآ اِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُّنَادِيْ لِلْاِيْمَانِ اَنْ اٰمِنُوْا بِرَبِّكُمْ فَاٰمَنَّا رَبَّنَا فَاغْفِرْ لَنَا ذُنُوْبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّاٰتِنَا وَتَوَفَّنَا مَعَ الْاَبْرَارِ رَبَّنَا وَاٰتِنَا مَا وَعَدْتَّنَا عَلٰى رُسُلِكَ وَلَا تُخْزِنَا يَوْمَ الْقِيٰمَةِ اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

100. اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنَ الْخَيْرِ كُلِّهِ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَمْ أَعْلَمْ وَأَعُوْذُ بِكَ مِنَ الشَّرِّ كُلِّهِ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَمْ أَعْلَمْ اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ مِنْهُ عِبَادُكَ الصَّالِحُونَ وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَكَ مِنْهُ عِبَادُكَ الصَّالِحُوْنَ (ابن ابي شيبة)

101. اَللّٰهُمَّ أَصْلِحْ لِي دِيْنِيَ الَّذِي هُوَ عِصْمَةُ أَمْرِيْ وَأَصْلِحْ لِي دُنْيَايَ الَّتِيْ فِيْهَا مَعَاشِي وَأَصْلِحْ لِي آخِرَتِيَ الَّتِي فِيْهَا مَعَادِي وَأَحْيِنِي مَا كَانَتِ الْحَيَاةُ خَيْرًا لِي وَتَوَفَّنِي إِذَا كَانَتِ الْوَفَاةُ خَيْرًا لِي وَاجْعَلِ الْحَيَاةَ زِيَادَةً لِي فِي كُلِّ خَيْرٍ وَاجْعَلِ الْمَوْتَ رَاحَةً لِي مِنْ كُلِّ شَرٍّ (مسلم)

*99. எங்கள் ரப்பே! உங்கள் ரப்(பை)பின் மீது ஈமான் கொள்ளுங்கள் என்று ஈமானின் பக்கம் அழைத்தவரின் அழைப்பை நாங்கள் கேட்டோம். எனவே நாங்கள் ஈமான் கொண்டோம். எங்கள் இறைவா! எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! எங்கள் குற்றங்களை எங்களை விட்டும் அகற்றி விடுவாயாக! எங்களை நல்லடியார்களுடன் சேர்ந்து மரணிக்க செய்வாயாக! எங்கள் இறைவா! உன் தூதர்கள் மூலம் எங்களுக்கு நீ வாக்களித்ததை எங்களுக்கு தந்தருள்வாயாக! கியாமத் நாளில் எங்களை கேவலப்படுத்தி விடாதே! நிச்சயமாக நீ வாக்குறுதிகளை மீறாதவனாக இருக்கிறாய். (3:93,94)*

*100. யா அல்லாஹ் நன்மைகள் அனைத்தையும் அவற்றில் நான் அறிந்தவைகள், நான் அறியாதவைகள் அனைத்தையும் நிச்சயமாக உன்னிடத்தில் வேண்டுகிறேன். இன்னும் தீமைகள் அனைத்தையும் விட்டும் அவற்றில் நான் அறிந்தவைகள், அறியாதவைகள் அனைத்தையும் விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். யா அல்லாஹ் உன் நல்லடியார்கள் உன்னிடம் எந்த நன்மைகளை எல்லாம் கேட்டார்களோ அவற்றை நானும் உன்னிடத்தில் கேட்கிறேன். இன்னும் உன்னுடைய நல்லடியார்கள் எந்த தீமைகளை எல்லாம் விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடினார்களோ அவற்றை விட்டு நானும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன். (நூல்: இப்னு அபீ ஷைபா)*

*101. யா அல்லாஹ்! எனது காரியத்திற்கு பாதுகாப்பளிக்கும் மார்க்கத்தையும், எனது வாழ்வு நடைபெறக்கூடிய எனது உலகத்தையும், எனது மீளுமிடமான மறுமையையும் எனக்கு சீர்திருத்துவாயாக! இன்னும் எதுவரை வாழ்வது எனக்கு நல்லதாக இருக்குமோ அதுவரை என்னை வாழச் செய்வாயாக! இன்னும் மரணம் எப்போது எனக்கு நல்லதாக இருக்குமோ அப்போது என்னை மரணிக்கச் செய்வாயாக! அனைத்து நற்காரியங்களையும் எனக்கு அதிகப்படுத்தி வைப்பதாக இந்த வாழ்வை நீ ஆக்கி வைப்பாயாக! அனைத்து வித தீங்குகளை விட்டும் எனக்கு சுகம் அளிப்பதாக மரணத்தை நீ ஆக்கி வைப்பாயாக! (நூல்: முஸ்லிம்)*

102. اَللّٰهُمَّ ارْزُقْنِى حُبَّكَ وَحُبَّ مَنْ يَنْفَعُنِى حُبُّهُ عِنْدَكَ اَللّٰهُمَّ مَا رَزَقْتَنِى مِمَّا أُحِبُّ فَاجْعَلْهُ قُوَّةً لِى فِيمَا تُحِبُّ وَمَا زَوَيْتَ عَنِّى مِمَّا أُحِبُّ فَاجْعَلْهُ فَرَاغًا لِى فِيمَا تُحِبّ (ترمذي)

103. اَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْهَدْمِ وَأَعُوذُ بِكَ مِنَ التَّرَدِّي وَأَعُوذُ بِكَ مِنَ الْغَرَقِ وَالْحَرَقِ وَالْهَرَمِ وَأَعُوذُ بِكَ أَنْ يَتَخَبَّطَنِيَ الشَّيْطَانُ عِنْدَ الْمَوْتِ وَأَعُوذُ بِكَ أَنْ أَمُوتَ فِي سَبِيلِكَ مُدْبِرًا وَأَعُوذُ بِكَ أَنْ أَمُوتَ لَدِيغًا (ابوداود)

104. اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَأَنْتَ الْمُسْتَعَانُ وَعَلَيْكَ الْبَلَاغُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ الْعَلِيِّ الْعَظِيمِ (الترمذي)

*102. யா அல்லாஹ் உன் காதலை இன்னும் உன்னிடத்தில் யாருடைய நேசம் எனக்கு பலன் தருமோ அவருடைய காதலையும் எனக்கு நீ வழங்குவாயாக யா அல்லாஹ் நான் நேசிக்கும் பொருட்களில் இருந்தும் எனக்கு எதையெல்லாம் நீ கொடுத்தாயோ அதை நீ விரும்பிய நற்செயல்களில் எனக்கு உதவியாக நீ ஆக்குவாயாக நான் நேசித்தவைகளில் எதை என்னை விட்டு நீ கொடுக்காமல் தடுத்துவிட்டாயோ அதை நீ விரும்பியவற்றில் நற்காரியம் செய்ய எனக்கு உதவியாக நீ ஆக்குவாயாக! ( நூல் திர்மிதி)*

*103. யா அல்லாஹ் இடிந்து விழுந்து மரணிப்பதை விட்டும் கீழே (உயரமான இடத்திலிருந்து) விழுந்து மரணிப்பதை விட்டும் தண்ணீரில் மூழ்கி மரணிப்பதை விட்டும், நெருப்பில் கரிந்து மரணிப்பதை விட்டும், கடும் முதுமை பருவத்தில் தன் தேவையை சுயமாக பூர்த்தி செய்ய முடியாத நிலையை அடைந்து மரணிப்பதை விட்டும், இன்னும் மரண நேரத்தில் சைத்தான் என் (ஈமானை) குழப்புவதை விட்டும், இன்னும் உன் பாதையில் புறமுதுகு காட்டி ஓடி மரணிப்பதை விட்டும், இன்னும் விஷ ஜந்துக்கள் கடித்து மரணிப்பதை விட்டும், நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (நூல்: அபூதாவூத்)*

*1 0 4 . யா அல்லாஹ்! உன் தூதராகிய முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிடம் எந்த நன்மைகளை எல்லாம் கேட்டார்களோ அவைகளை நானும் உன்னிடம் கேட்கிறேன். இன்னும் உன் தூதர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உன்னிடம் எந்த தீமைகளை எல்லாம் விட்டுப் பாதுகாவல் தேடினார்களோ அவற்றை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீயே! உதவி செய்பவன், நன்மை தீமைகளை அடையச் செய்வதும் உன் கைவசமே இருக்கிறது. உயர்வும் கண்ணியமும் மிக்க அல்லாஹ்வைக் கொண்டே தவிர யாருக்கும் சக்தியும், ஆற்றலும் இல்லை. (நூல்: திர்மதி)*

105) اَللّٰهُمَّ أَنْتَ الأَوَّلُ فَلَيْسَ قَبْلَكَ شَيْءٌ وَأَنْتَ الْاٰخِرُ فَلَيْسَ بَعْدَكَ شَيْءٌ وَأَنْتَ الظَّاهِرُ فَلَيْسَ فَوْقَكَ شَيْءٌ وَأَنْتَ الْبَاطِنُ فَلَيْسَ دُونَكَ شَيْءٌ اقْضِ عَنَّا الدَّيْنَ وَأَغْنِنَا مِنَ الْفَقْرِ (مسلم)

106) اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ خَطِيْئَتِيْ وَجَهْلِيْ، وَإِسْرَافِيْ فِي أَمْرِيْ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، اللّٰهُمَّ اغْفِرْ لِي جِدِّيْ وَهَزْلِي، وَخَطَئِى وَعَمْدِي، وَكُلُّ ذٰلِكَ عِنْدِي، اَللّٰهُمَّ اغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ، وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ، وَأَنْتَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ (مسلم)

107) اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْجَنَّةَ وَمَا قَرَّبَ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ عَمَلٍ وَأَعُوْذُ بِكَ مِنَ النَّارِ وَمَا قَرَّبَ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ عَمَلٍ وَأَسْأَلُكَ أَنْ تَجْعَلَ كُلَّ قَضَاءٍ لِي خَيْراً وَأَسْأَلُكَ مَا قَضَيْتَ لِي مِنْ أَمْرٍ أَنْ تَجْعَلَ عَاقِبَتَهُ رُشْداً (ابن ماجة)

*105. யா அல்லாஹ்! நீயே ஆரம்பமானவன். உனக்கு முன் எந்த வஸ்துவும் இல்லை. நீயே இறுதியானவன். உனக்கு பின் எதுவும் இல்லை. நீயே வெளிரங்கமானவன். உனக்கு மேல் எதுவும் இல்லை. நீயே உள்ரங்கமானவன் உன்னை அன்றி வேறு எதுவும் இல்லை எங்கள் கடனை நிறைவேற்றி வைப்பாயாக! வறுமையில் இருந்து எங்களை பாதுகாத்து செல்வந்தர்களாக ஆக்குவாயாக! ( நூல் முஸ்லிம்)*

*106. யா அல்லாஹ் என் தவறுகளையும், அறியாமையையும் என் காரியத்தில் ஏற்படும் வீண் விரயங்களையும் என்னை விட அதிகமாக எந்த குறைகளை நீ அறிந்திருக்கிறாயோ, அவைகளையும் நீ மன்னிப்பாயாக! யா அல்லாஹ் நான் தெரிந்து வேண்டுமென்று செய்த பாவங்களையும், நான் விளையாட்டாக செய்த பாவங்களையும், தவறுதலாக செய்த பாவங்களையும், வேண்டுமென்றே செய்த பாவங்களையும் நீ மன்னிப்பாயாக! இவை அனைத்தும் என்னிடம் இருக்கின்றன. இறைவா! நான் முற்படுத்திய, பிற்படுத்திய பாவங்கள் நான் ரகசியமாக செய்த பாவங்கள் நான் வெளிப்படையாக செய்த பாவங்கள் நீ எதை என்னை விட அதிகம் அறிந்திருக்கிறாயோ, அவைகள் அனைத்தையும் நீ மன்னிப்பாயாக! நீயே முற்படுத்தக் கூடியவன், நீயே பிற்படுத்தக் கூடியவன், நீ அனைத்து வஸ்துக்களின் மீதும் சக்தி பெற்றவனாக இருக்கிறாய். (நூல்: முஸ்லிம்)*

*107. யா அல்லாஹ் நான் உன்னிடம் சொர்க்கத்தையும், இன்னும் அதன் பக்கம் நெருங்கச் செய்யும் சொல், செயல்களையும் கேட்கிறேன். இன்னும் நரகத்தை விட்டும், இன்னும் அதன் பக்கம் நெருங்கச் செய்யும் சொல்லையும், செயலையும் விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். என் விதி அனைத்தையும் சிறந்ததாக ஆக்குமாறு உன்னிடம் வேண்டுகிறேன். நீ எனக்கு விதியாக்கிய காரியங்களின் முடிவை நல்லதாக ஆக்க வேண்டும் என்றும் உன்னிடம் வேண்டுகிறேன். (நூல்: இப்னுமாஜா)*

108. اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْعَافِيَةَ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ فِي دِيْنِي وَدُنْيَايَ وَأَهْلِيْ وَمَالِي اَللّٰهُمَّ اسْتُرْ عَوْرَاتِي وَآمِنْ رَوْعَاتِي اَللّٰهُمَّ احْفَظْنِي مِنْ بَيْنِ يَدَيَّ وَمِنْ خَلْفِيْ وَعَنْ يَمِيْنِيْ وَعَنْ شِمَالِي وَمِنْ فَوْقِي وَأَعُوْذُ بِعَظَمَتِكَ أَنْ أُغْتَالَ مِنْ تَحْتِيْ

(ابوداود)

109. سَيِّدُ الإِسْتِغْفَارِ: اَللّٰهُمَّ أَنْتَ رَبِّي لَا إِلٰهَ إِلاَّ أَنْتَ خَلَقْتَنِي وَأَنَا عَبْدُكَ وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ أَبُوْءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَأَبُوْءُ لَكَ بِذَنْبِيْ فَاغْفِرْ لِي فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلاَّ أَنْتَ (البخاري)

*108. யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னிடம் இவ்வுலகிலும் மறுமையிலும் ஆரோக்கியத்தை கேட்கிறேன் யா அல்லாஹ்! எனது தீனிலும் உலகத்திலும் குடும்பத்திலும் பொருளிலும் நிச்சயமாக உனது மன்னிப்பையும் ஆரோக்கியத்தையும் வேண்டுகிறேன். யா அல்லாஹ்! என் குறைகளை மன்னிப்பாயாக என் திடுக்கங்களை நீக்குவாயாக! யா அல்லாஹ்! எனக்கு முன் புறத்திலிருந்தும் பின்புறத்தில் இருந்தும் வலப்புறத்தில் இருந்தும் இடப்புறத்தில் இருந்தும் மேலிருந்தும் வரக்கூடிய எல்லா தீங்குகளை விட்டும் என்னை பாதுகாப்பாயாக! உன் மகத்துவத்தின் பொருட்டால் எனக்கு கீழிருந்து பூமியில் உள்வாங்கப்பட்டு அழிவதை விட்டும் நான் பாதுகாவல் தேடுகிறேன். ( நூல் : அபூதாவூத்)*

*109. யா அல்லாஹ்! நீயே எங்கள் ரப்பாக இருக்கிறாய் உன்னைத் தவிர இலாஹ் (தேவைகளை பூர்த்தி செய்பவன்) யாரும் இல்லை. நீயே என்னை படைத்தாய் நான் உனது அடிமை என்னால் இயன்ற அளவு உனது உடன்படிக்கையின் மீதும் வாக்குறுதியின் மீதும் செயல்படுகிறேன் நான் செய்த தீமைகளை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீ எனக்கு செய்த அருட்கொடைகளை ஒப்புக்கொள்கிறேன் எனது பாவங்களையும் உன்னிடம் ஒப்புக்கொள்கிறேன் என்னை நீ மன்னிப்பாயாக உன்னை தவிர என் பாவங்களை மன்னிக்க யாரும் இல்லை. (நூல் : புகாரி)*

110. اَللّٰهُمَّ اهْدِنِي فِيمَنْ هَدَيْتَ وَعَافِنِي فِيمَنْ عَافَيْتَ وَتَوَلَّنِي فِيمَنْ تَوَلَّيْتَ وَبَارِكْ لِي فِيمَا أَعْطَيْتَ وَقِنِي شَرَّ مَا قَضَيْتَ فَإِنَّكَ تَقْضِي وَلَا يُقْضَى عَلَيْكَ إِنَّهُ لَا يَذِلُّ مَنْ وَالَيْتَ وَلَا يَعِزُّ مَنْ عَادَيْتَ تَبَارَكْتَ رَبَّنَا وَتَعَالَيْتَ نَسْتَغْفِرُكَ وَنَتُوبُ إِلَيْكَ وَصَلَّى اللّٰهُ عَلَى النَّبِيِّ

(ابوداود)

111. اَللّٰهُمَّ إِنَّا نَسْتَعِينُكَ وَنَسْتَغْفِرُكَ وَنَسْتَهْدِيكَ وَنُؤْمِنُ بِكَ وَنَتُوبُ إِلَيْكَ وَنَتَوَكَّلُ عَلَيْكَ وَنُثْنِي عَلَيْكَ الْخَيْرَ كُلَّهُ وَنَشْكُرُكَ وَلَا نَكْفُرُكَ وَنَخْلَعُ وَنَتْرُكُ مَنْ يَفْجُرُكَ اَللّٰهُمَّ إِيَّاكَ نَعْبُدُ وَلَكَ نُصَلِّي وَنَسْجُدُ وَإِلَيْكَ نَسْعَى وَنَحْفِدُ وَنَرْجُو رَحْمَتَكَ وَنَخْشَى عَذَابَكَ إِنَّ عَذَابَكَ الْجِدَّ بِالْكُفَّارِ مُلْحِقٌ (الدر المنثور في التفسير بالماثور)

*110. யா அல்லாஹ்! நீ நேர்வழி காட்டியவர்களுடன் எனக்கு நேர்வழி காட்டுவாயாக! நீ சுகம் அளித்தவர்களுடன் எனக்கு சுகம் அளிப்பாயாக! நீ பொறுப்பேற்றவர்களுடன் எனக்கு பொறுப்பேற்றுக் கொள்வாயாக! நீ கொடுத்தவற்றில் பரக்கத்தை செய்வாயாக! நீ விதித்தவற்றின் தீங்கிலிருந்து என்னை காத்தருள்வாயாக! நிச்சயமாக நீயே தீர்ப்பளிக்கிறாய் உன் மீது தீர்ப்பு செய்யப்படுவது இல்லை. நிச்சயம் நீ பொறுப்பேற்றவர்கள் இழிவடைய மாட்டார்கள் நீ விரோதித்தவர்கள் கண்ணியம் அடைய மாட்டார்கள் எங்கள் ரப்பே! நீ கண்ணியமிக்கவனாகவும், உயர்ந்தவனாகவும் இருக்கிறாய். உன்னிடம் மன்னிப்பு தேடுகிறோம், தவ்பா செய்கிறோம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத்து கூறுவானாக! (நூல்: அபூதாவூத்)*

*111. யா அல்லாஹ்! நிச்சயமாக நாங்கள் உன்னிடம் உதவி தேடுகிறோம் பாவ மன்னிப்பு தேடுகிறோம் நேர்வழியை தேடுகிறோம் இன்னும் உன்னை கொண்டு ஈமான் கொண்டோம் இன்னும் உன் பக்கமே நாங்கள் திரும்பினோம் இன்னும் உன் மீது நம்பிக்கை வைத்தோம் அனைத்து நன்மையும் உன் மீதே புகழ்கிறோம். உனக்கு நன்றி செலுத்துகிறோம் இன்னும் உனக்கு நன்றி மறக்க மாட்டோம் உனக்கு மாறு செய்பவர்களை நாங்கள் விட்டுவிடுவோம் கழற்றி விடுவோம். யா அல்லாஹ்! உன்னையே நாங்கள் வணங்குகிறோம். மேலும் உனக்காகவே தொழுகின்றோம். உனக்கே சிரம் தாழ்த்துகிறோம் மேலும் உன் பக்கமே விரைந்து வருகிறோம் உன் அருளை ஆதரவு வைக்கின்றோம். உன் தண்டனையை பயப்படுகிறோம். நிச்சயமாக உன்னுடைய தண்டனை இறை நிராகரிப்பாளர்களுக்கே கிடைக்கக் கூடியதாக இருக்கிறது. ( நூல் : துர்ருல் மன்சூர் ஃபித் தஃப்ஸீரி ஃபில் மஃசூர்)*

112) اَللّٰهُمَّ اقْسِمْ لَنَا مِنْ خَشْيَتِكَ مَا تَحُوْلُ بِهِ بَيْنَنَا وَبَيْنَ مَعَاصِيْكَ وَمِنْ طَاعَتِكَ مَا تُبَلِّغُنَا بِهِ جَنَّتَكَ وَمِنَ الْيَقِيْنِ مَا تُهَوِّنُ بِهِ عَلَيْنَا مَصَائِبَ الدُّنْيَا وَمَتِّعْنَا بِأَسْمَاعِنَا وَأَبْصَارِنَا وَقُوَّتِنَا مَا أَحْيَيْتَنَا وَاجْعَلْهُ الْوَارِثَ مِنَّا وَاجْعَلْ ثَأْرَنَا عَلَى مَنْ ظَلَمَنَا وَانْصُرْنَا عَلَى مَنْ عَادَانَا وَلَا تَجْعَلْ مُصِيْبَتَنَا فِي دِيْنِنَا وَلَا تَجْعَلِ الدُّنْيَا أَكْبَرَ هَمِّنَا وَلَا مَبْلَغَ عِلْمِنَا وَلَا تُسَلِّطْ عَلَيْنَا مَنْ لَا يَرْحَمُنَا (الترمذي)

113) لَا إِلٰهَ إِلَّا اللهُ الْحَلِيْمُ الْكَرِيْمُ سُبْحَانَ اللهِ رَبِّ الْعَرْشِ الْعَظِيْمِ الْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ أَسْأَلُكَ مُوْجِبَاتِ رَحْمَتِكَ وَعَزَائِمَ مَغْفِرَتِكَ وَالْعِصْمَةَ مِنْ كُلِّ ذَنْبٍ وَالْغَنِيْمَةَ مِنْ كُلِّ بِرٍّ وَالسَّلَامَةَ مِنْ كُلِّ إِثْمٍ لَا تَدَعْ لِي ذَنْبًا إِلَّا غَفَرْتَهُ وَلَا هَمًّا إِلَّا فَرَّجْتَهُ وَلَا كَرْبًا إِلَّا نَفَّسْتَهُ وَلَا ضُرًّا إِلَّا كَشَفْتَهُ وَلَا حَاجَةً هِيَ لَكَ رِضًى إِلَّا قَضَيْتَهَا يَا أَرْحَمَ الرَّاحِمِيْنَ (الترمذي)

*112. யா அல்லாஹ் உனக்கு மாறு செய்வதை விட்டும் என்னை தடுக்கக்கூடிய அளவுக்கு உன் மீது பயத்தையும் உனது சொர்க்கத்தை அடையக் கூடிய அளவுக்கு உனக்கு வழிபடுவதையும் உலக துன்பங்களை எல்லாம் எளிதாகும் அளவுக்கு உறுதியையும் எங்களுக்கு பங்கிட்டு தருவாயாக எங்களை நீ வாழ வைக்கும் காலமெல்லாம் எங்கள் காதுகள் மூலம் கண்கள் மூலம் சக்தியின் மூலம் எங்களை சுகம் பெற செய்வாயாக அதை எங்களுக்கு வாரிசாக்குவாயாக! எங்களுக்கு அநீதி இழைத்தவர்களின் மீது எம் பழி வாங்குதலை ஆக்குவாயாக! எங்களின் எதிரிகளுக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக எங்கள் துன்பங்களை எங்கள் தீனிலே ஆக்கி விடாதே எங்களின் முக்கிய நோக்கமாகவும் எங்களின் அறிவு சென்றடையும் இடமாகவும் உலகத்தை ஆக்கி விடாதே எங்கள் மீது இரக்கம் காட்டாதவர்களை எங்கள் மீது சாட்டி விடாதே! (நூல்: திர்மிதி)*

*113. மிக்க பொறுமையாளனும் சங்கை உள்ளோனுமான அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் என் தேவைகளை பூர்த்தி செய்யக் கூடிய இலாஹாக இல்லை. மகத்தான அரசின் ரப்பான அல்லாஹ்வை தூய்மையாக்குகிறேன். உலகம் அனைத்திற்கும் ரப்பான அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும். உனது அருளை பெற்று தரக்கூடியதையும், உனது மன்னிப்பின் உறுதியையும், பாவங்கள் அனைத்திலிருந்தும் பாதுகாப்பையும், நன்மைகள் அனைத்தையும் பெறுவதையும், பாவங்களிலிருந்து நீங்குவதையும் உன்னிடத்தில் கேட்கிறேன். எங்களது எந்தப் பாவத்தையும் நீ மன்னிக்காமல் விட்டு விடாதே! எந்த கவலையையும் மகிழ்ச்சியாக்காமல் விடாதே. எந்தத் துன்பத்தையும் நீக்காது விடாதே. எந்தத் தீங்கையும் அகற்றாது விடாதே. உனக்கு பொருத்தமுள்ள தேவையை நிறைவேற்றாது விட்டு விடாதே. கிருபையாளர்களுக்கு எல்லாம் கிருபையாளனே! (நூல் - திர்மிதி)*

114. اَللّٰهُمَّ إِنِّي عَبْدُكَ وَابْنُ عَبْدِكَ وَابْنُ أَمَتِكَ نَاصِيَتِي بِيَدِكَ مَاضٍ فِيَّ حُكْمُكَ عَدْلٌ فِيَّ قَضَاؤُكَ أَسْأَلُكَ بِكُلِّ اسْمٍ هُوَ لَكَ سَمَّيْتَ بِهِ نَفْسَكَ أَوْ أَنْزَلْتَهُ فِي كِتَابِكَ أَوْ عَلَّمْتَهُ أَحَدًا مِنْ خَلْقِكَ أَوِ اسْتَأْثَرْتَ بِهِ فِي عِلْمِ الْغَيْبِ عِنْدَكَ أَنْ تَجْعَلَ الْقُرْآنَ الْعَظِيْمَ رَبِيْعَ قَلْبِي وَنُوْرَ بَصَرِيْ وَجَلاَءَ حُزْنِيْ وَذَهَابَ هَمِّيْ (ابن حبان)

115. اَللّٰهُمَّ اجْعَلْ فِي قَلْبِيْ نُوْرًا وَفِي بَصَرِيْ نُوْرًا وَفِي سَمْعِيْ نُوْرًا وَعَنْ يَمِيْنِيْ نُوْرًا وَعَنْ شِمَالِيْ نُوْرًا وَمِنْ خَلْفِيْ نُوْرًا وَمِنْ أَمَامِيْ نُوْرًا وَاجْعَلْ مِنْ فَوْقِيْ نُوْرًا وَمِنْ تَحْتِيْ نُوْرًا اَللّٰهُمَّ أَعْطِنِيْ نُوْرًا وَاجْعَلْ لِي نُوْرًا وَفِي عَصَبِيْ نُوْرًا وَفِي لَحْمِيْ نُوْرًا وَفِيْ دَمِيْ نُوْرًا وَفِيْ شَعْرِيْ نُوْرًا وَفِيْ بَشَرِي نُوْرًا وَفِيْ لِسَانِي نُوْرًا وَاجْعَلْ فِي نَفْسِيْ نُوْرًا وَأَعْظِمْ لِيْ نُوْرًا وَاجْعَلْنِيْ نُوْرًا (مسلم)

*114. யா அல்லாஹ் நிச்சயமாக நான் உன் அடியான் (என் தாய் தந்தையும் உன் அடிமை) உன் அடிமையின் மகன் உன் அடிமைப்பெண்ணின் மகன் என் உச்சி குடுமி (முழு கட்டுப்பாடும்) உன் கையில் தான் இருக்கிறது. உன் உத்தரவு என்னில் செல்லுபடியாகும் உன் உத்தரவின் படிதான் நடக்கிறது என் விஷயத்தில் உன் எல்லா தீர்ப்புகளும் நியாயமானது. இறைவா! உன் அனைத்து திருநாமங்களின் பொருட்டாலும் உன்னிடம் கேட்கிறேன். அந்த பெயர்களை உனக்கே நீ வைத்துக் கொண்டாய் அல்லது உனது வேதங்களில் இறக்கி வைத்தாய் அல்லது உன் படைப்புகளில் யாருக்காவது கற்றுக் கொடுத்தாய், அல்லது உனது மறைவான ஞானத்தில் அதைப் பாதுகாத்து வைத்திருக்கிறாய் - அவற்றின் பொருட்டால் நான் உன்னிடம் கேட்கிறேன். மகத்துவமிக்க குர்ஆனை என் உள்ளத்தின் வசந்தமாக நீ ஆக்குவாயாக என் பார்வையின் ஒளியாக ஆக்குவாயாக என் கவலைகளையும் துக்கங்களையும் நீக்க கூடியதாக நீ ஆக்குவாயாக! (நூல் - இப்னு ஹிப்பான்)*

*115. யா அல்லாஹ்! என் உள்ளத்தை நூராக ஆக்குவாயாக என் பார்வையை நூராக்குவாயாக! என் கேள்வியை நூராக்குவாயாக! என் வலப்புறம் இடப்புறம் நூராக்குவாயாக! என் முன்னும் பின்னும் நூராக ஆக்குவாயாக! எனக்கு மேல்புறமும் நூராக்குவாயாக! எனக்கு கீழ்புறத்தையும் நூராக்குவாயாக! யா அல்லாஹ்! எனக்கு நீ நூரை கொடுப்பாயாக! எனக்கு நூரை நீ ஆக்கு என் நரம்பை நூராக்குவாயாக என் சதையை நூராக்குவாயாக என் இரத்தத்தை நூராக்குவாயாக என் முடியையும், தோலையும் நூராக்குவாயாக என் நாவையும், நப்ஸையும் நூராக்குவாயாக நூரை எனக்கு அதிகப்படுத்துவாயாக! என்னையே நூராக்குவாயாக! (நூல் முஸ்லிம்)*

116. اَللّٰهُمَّ بِعِلْمِكَ الْغَيْبَ وَقُدْرَتِكَ عَلَى الْخَلْقِ أَحْيِنِي مَا عَلِمْتَ الْحَيَاةَ خَيْرًا لِي وَتَوَفَّنِي إِذَا عَلِمْتَ الْوَفَاةَ خَيْرًا لِي اللّٰهُمَّ وَأَسْأَلُكَ خَشْيَتَكَ فِي الْغَيْبِ وَالشَّهَادَةِ وَأَسْأَلُكَ كَلِمَةَ الْحَقِّ فِي الرِّضَا وَالْغَضَبِ وَأَسْأَلُكَ الْقَصْدَ فِي الْفَقْرِ وَالْغِنَى وَأَسْأَلُكَ نَعِيمًا لَا يَنْفَدُ وَأَسْأَلُكَ قُرَّةَ عَيْنٍ لَا تَنْقَطِعُ وَأَسْأَلُكَ الرِّضَاءَ بَعْدَ الْقَضَاءِ وَأَسْأَلُكَ بَرْدَ الْعَيْشِ بَعْدَ الْمَوْتِ وَأَسْأَلُكَ لَذَّةَ النَّظَرِ إِلَى وَجْهِكَ وَالشَّوْقَ إِلَى لِقَائِكَ فِي غَيْرِ ضَرَّاءَ مُضِرَّةٍ وَلَا فِتْنَةٍ مُضِلَّةٍ اللّٰهُمَّ زَيِّنَّا بِزِينَةِ الْإِيمَانِ وَاجْعَلْنَا هُدَاةً مُهْتَدِينَ (أحمد، والنسائی)

*116. யா அல்லாஹ் உன் மறைவான ஞானத்தின் பொருட்டாலும் உன் சிருஷ்டிகளின் மீது இருக்கும் உன் வல்லமையின் பொருட்டாலும் நான் உன்னிடம் கேட்கிறேன் என் வாழ்வு எனக்கு நன்மையாக இருக்கும் என்று நீ அறியும் காலமெல்லாம் என்னை நீ வாழ வைப்பாயாக என் மரணம் எனக்கு நன்மையாக சிறந்தது என்று நீ அறிந்தால் மரணிக்க செய்வாயாக யா அல்லாஹ் முன்னிலும் மறைவிலும் உனக்கு அஞ்சுவதை கேட்கிறேன் கோபத்திலும் பொருத்தத்திலும் உண்மையே பேசுவதற்கு அருள் புரிவாயாக செல்வத்திலும் ஏழ்மையிலும் நடுநிலையை பேண அருள் புரிவாயாக! முடிவு பெறாத அருளை உன்னிடம் கேட்கிறேன் துண்டிக்கப்படாத கண் குளிர்ச்சியை உன்னிடம் கேட்கிறேன் உன் தீர்ப்புக்கு பின் அதை நான் பொருந்திக் கொள்வதையும் மரணத்திற்கு பின் சுகமான வாழ்வையும் உன்னிடத்தில் நான் கேட்கிறேன் இன்னும் இடர் தரும் தீங்குகள் இல்லாமலும் வழி கெடுக்கும் குழப்பங்கள் இல்லாமலும் உன் திருமுகத்தை பார்க்கும் இன்பத்தையும் உன்னை சந்திக்கும் ஆவலையும் உன்னிடம் வேண்டுகிறேன். ஈமானின் அலங்காரத்தைக் கொண்டு எங்களை அலங்கரிப்பாயாக! இன்னும் நேர்வழி பெற்றவர்களாகவும் நேர்வழி காட்டுபவர்களாகவும் எங்களை நீ ஆக்குவாயாக! (நூல்: அஹ்மத், நஸயீ)*

117. اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ رَحْمَةً مِّنْ عِنْدِكَ تَهْدِيْ بِهَا قَلْبِيْ وَتَجْمَعُ بِهَا أَمْرِيْ وَتَلُمُّ بِهَا شَعَثِيْ وَتُصْلِحُ بِهَا غَائِبِيْ وَتَرْفَعُ بِهَا شَاهِدِيْ وَتُزَكِّيْ بِهَا عَمَلِيْ وَتُلْهِمُنِيْ بِهَا رُشْدِيْ وَتَرُدُّ بِهَا أُلْفَتِيْ وَتَعْصِمُنِيْ بِهَا مِنْ كُلِّ سُوْءٍ.

اَللّٰهُمَّ أَعْطِنِيْ إِيْمَانًا صَادِقًا وَيَقِيْنًا لَيْسَ بَعْدَهُ كُفْرٌ وَرَحْمَةً أَنَالُ بِهَا شَرَفَ كَرَامَتِكَ فِي الدُّنْيَا وَالْاٰخِرَةِ ،

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْفَوْزَ فِي الْقَضَاءِ وَنُزُلَ الشُّهَدَاءِ وَعَيْشَ السُّعَدَاءِ وَمُرَافَقَةَ الْأَنْبِيَاءِ وَالنَّصْرَ عَلَى الْأَعْدَاءِ ،

اَللّٰهُمَّ إِنِّيْ أُنْزِلُ بِكَ حَاجَتِيْ وَإِنْ قَصُرَ رَأْيِيْ وَضَعُفَ عَمَلِيْ افْتَقَرْتُ إِلَى رَحْمَتِكَ فَأَسْأَلُكَ يَا قَاضِيَ الْأُمُوْرِ وَيَا شَافِيَ الصُّدُوْرِ كَمَا تُجِيْرُ بَيْنَ الْبُحُوْرِ أَنْ تُجِيْرَنِيْ مِنْ عَذَابِ السَّعِيْرِ وَمِنْ دَعْوَةِ الثُّبُوْرِ وَمِنْ فِتْنَةِ الْقُبُوْرِ ،

*117. யா அல்லாஹ் உன்னில் இருந்தும் ரஹ்மத்தை கிருபையை நான் வேண்டுகிறேன் அந்த கிருபையைக் கொண்டு என் மனதை நேர்வழியின் பால் சேர்ப்பாயாக என் காரியங்களை சேகரமாக்குவாயாக சிதறிய என் விஷயங்களை ஒன்று சேர்ப்பாயாக! என் மறைவான விஷயங்களை சீராக்குவாயாக என் வெளிப்படையான விஷயங்களில் உயர்வைத் தருவாயாக எனது அமல்களை பரிசுத்தப்படுத்துவாயாக! நேர்வழியை எங்களுக்கு உதிப்பாக்குவாயாக நேசத்தை எங்களுக்கு தருவாயாக இன்னும் எல்லா தீமைகளை விட்டும் எங்களை காப்பாற்றுவாயாக!*

*யா அல்லாஹ் உண்மையான ஈமானை எனக்கு தருவாயாக பின்னால் மறுப்பு உண்டாகாத உறுதியை தருவாயாக இவ்வுலகிலும் மறு உலகிலும் உனது மேன்மையான கொடைத்தன்மையின் சிறப்பை நான் அடைவதற்காக உனது அருளை தருவாயாக!*

*யா அல்லாஹ்! நிச்சயமாக நான் தீர்ப்பிலே வெற்றியையும் ஷுஹதாக்களின் அந்தஸ்தையும் சீதேவித்தனமான வாழ்வையும் நபிமார்களின் தோழமையையும் விரோதிகளுக்கு எதிராக உதவியையும் உன்னிடம் வேண்டுகிறேன்.*

*யா அல்லாஹ்! நிச்சயமாக நான் என் தேவைகளை உன்னிடத்தில் இறக்கி விட்டேன் ஒப்படைத்து விட்டேன் என் அறிவு குறைவு என் அமலும் பலகீனமானது குறையுள்ளது உன் அருளின் பக்கம் நான் தேவை உடையவன் தேவைகளை பூர்த்தி செய்பவனே இன்னும் உள்ளங்களுக்கு நிவாரணம் அளிப்பவனே உன்னிடம் நான் கேட்கிறேன் கடல்களுக்கு மத்தியில் ஒன்று மற்றொன்றோடு கலக்காமல் தடுத்தது போல் நரக வேதனையிலிருந்தும் அழிவை வேண்டுவதிலிருந்தும் கப்ரின் குழப்பத்தில் இருந்தும் என்னை பாதுகாப்பாயாக!*

اَللّٰهُمَّ مَا قَصُرَ عَنْهُ رَأْيِي وَضَعُفَ عَنْهُ عَمَلِيْ وَلَمْ تَبْلُغْهُ نِيَّتِيْ وَلَمْ تَبْلُغْهُ مَسْأَلَتِي مِنْ خَيْرٍ وَعَدْتَهُ أَحَدًا مِنْ خَلْقِكَ أَوْ خَيْرٍ أَنْتَ مُعْطِيْهِ أَحَدًا مِّنْ عِبَادِكَ فَإِنِّيْ أَرْغَبُ إِلَيْكَ فِيْهِ وَأَسْأَلُكَهُ بِرَحْمَتِكَ يَا رَبَّ الْعَالَمِيْنَ.

اَللّٰهُمَّ ذَا الْحَبْلِ الشَّدِيْدِ وَالْأَمْرِ الرَّشِيْدِ أَسْأَلُكَ الْأَمْنَ يَوْمَ الْوَعِيْدِ وَالْجَنَّةَ يَوْمَ الْخُلُوْدِ مَعَ الْمُقَرَّبِيْنَ الشُّهُوْدِ الرُّكَّعِ السُّجُوْدِ الْمُوْفِيْنَ بِالْعُهُوْدِ إِنَّكَ رَحِيْمٌ وَدُوْدٌ وَأَنْتَ تَفْعَلُ مَا تُرِيْدُ.

اَللّٰهُمَّ اجْعَلْنَا هَادِيْنَ مُهْتَدِيْنَ غَيْرَ ضَالِّيْنَ وَلَا مُضِلِّيْنَ سِلْمًا لِأَوْلِيَائِكَ وَعَدُوًّا لِأَعْدَائِكَ نُحِبُّ بِحُبِّكَ مَنْ أَحَبَّكَ وَنُعَادِيْ بِعَدَاوَتِكَ مَنْ خَالَفَكَ مِنْ خَلْقِكَ،

யா அல்லாஹ்! எந்த நன்மைகளைப் பற்றி சிந்திக்காமல் எனது அறிவு சுருங்கிவிட்டதோ இன்னும் எனது நற்செயல்கள் அவற்றை அடைவதை விட்டும் பலஹீனமாகி விட்டதோ இன்னும் எனது எண்ணங்களில் எவற்றை அடையவில்லையோ, இன்னும் நான் எவற்றை உன்னிடம் கேட்கவும் இல்லையோ அத்தகைய நன்மைகளை உனது படைப்புகளில் யாருக்கேனும் தருவதாக நீ வாக்களித்திருந்தால் அல்லது அடியார்களில் யாருக்கேனும் நீ வழங்கியிருந்தால் அவற்றை எனக்கும் நீ தர வேண்டும் என்று உன்னிடம் ஆசை வைக்கிறேன். உன் பேரருளைக் கொண்டு அவற்றை நீ எனக்கும் தர வேண்டும் என்று உன்னிடம் கேட்கிறேன். அகில உலகங்களையும் படைத்து பரிபாலிப்பவனே!

யா அல்லாஹ்! மார்க்கம் எனும் உறுதியான கயிற்றை உடையவனே! நேரான காரியம் உடையவனே நான் உன்னிடம் மறுமை நாளின் திடுக்கங்களில் இருந்தும் அச்சமற்ற நிலையையும் நிரந்தர சுவனம் நிரந்தர நரகம் என தீர்ப்பளிக்கும் நாளில் உன்னை பார்த்து ரசிக்கும் முகர்ரபீன்களுடனும் அதிகம் ருகூஉ சுஜூத் செய்பவர்களுடனும் உன்னிடம் ஒப்பந்தங்களை நிறைவேற்றியவர்களுடனும் என்னை நீ சொர்க்கத்தில் ஆக்குவதையும் கேட்கிறேன் நிச்சயமாக நீயே அன்பாளன் மிக கருணையாளன் நீ நாடியதை செய்யும் வல்லமை உடையவன்.

யா அல்லாஹ்! நீ எங்களை நேர்வழி காட்டுபவர்களாகவும் நேர்வழி பெற்றவர்களாகவும் ஆக்குவாயாக வழி கெடாதவர்களாகவும் வழி கெடுக்காதவர்களாகவும் ஆக்குவாயாக! உன் நேசர்களுக்கு நேசமாகவும் உன் விரோதிகளுக்கு விரோதமாகவும் ஆக்குவாயாக உன்னை நேசிப்பவர்களை உன் நேசத்திற்காக நாங்கள் நேசிக்கிறோம். உன் படைப்பில் உன்னை விரோதிப்பவர்களை உன் விரோதத்திற்காக நாமும் விரோதிக்கிறோம்.

اَللّٰهُمَّ هٰذَا الدُّعَـــاءُ وَعَلَيْكَ الاِسْتِجَـــابَةُ وَهٰذَا الْجَهْدُ وَعَلَيْكَ التُّكْلَانُ سُبْحَانَ الَّذِىْ تَعَطَّفَ الْعِزَّ وَقَالَ بِهٖ سُبْحَانَ الَّذِىْ لَبِسَ الْمَجْدَ وَتَكَرَّمَ بِهٖ سُبْحَانَ الَّذِىْ لَا يَنْبَغِى التَّسْبِيْحُ اِلَّا لَهٗ سُبْحَانَ ذِى الْفَضْلِ وَالنِّعَمِ سُبْحَـــانَ ذِى الْمَجْدِ وَالْكَرَمِ سُبْحَـــانَ ذِى الْجَلَالِ وَالْاِكْرَامِ (ترمذي)

118. رَبِّ أَعِنِّىْ وَلَا تُعِنْ عَلَيَّ وَانْصُرْنِىْ وَلَا تَنْصُرْ عَلَيَّ وَامْكُرْ لِىْ وَلَا تَمْكُرْ عَلَيَّ وَاهْدِنِىْ وَيَسِّرِ الْهُدٰى لِىْ وَانْصُرْنِىْ عَلٰى مَنْ بَغٰى عَلَيَّ رَبِّ اجْعَلْنِيْ لَكَ شَكَّارًا لَكَ ذَكَّارًا لَكَ رَهَّابًا لَكَ مِطْوَاعًا لَكَ مُخْبِتًا اِلَيْكَ أَوَّاهًا مُنِيْبًا رَبِّ تَقَبَّلْ تَوْبَتِيْ وَاغْسِلْ حَوْبَتِيْ وَأَجِبْ دَعْوَتِيْ وَثَبِّتْ حُجَّتِيْ وَسَدِّدْ لِسَانِيْ وَاهْدِ قَلْبِيْ وَاسْلُلْ سَخِيْمَةَ صَدْرِيْ (ترمذي)

وَصَلَّى اللّٰهُ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ، وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

*இறைவா! இது எனது வேண்டுகோள்! இதை ஏற்று பதிலளிப்பது உனது விருப்பமே ஆகும்! இறைவா! இது எனது சிறு முயற்சி தான். எனது முழு நம்பிக்கையும் உன் மீது தான் இருக்கிறது. பெருமையை போர்வையாய் அணிந்து அதை தனக்கே சொந்தமாக்கிக் கொண்டானே அந்த இறைவன் மிகத் தூயவன். கண்ணியத்தை ஆடையாய் அணிந்து அதை நமக்கும் அள்ளிக் கொடுத்தானே அந்த இறைவன் மகா தூயவன். அவனையன்றி வேறு யாரையும் தஸ்பீஹ் செய்வது தகுதி அல்லவே அத்தகைய இறைவன் மகா தூயவன்! அருளும் கொடையும் மிக்க இறைவன் மாக தூயவன், கண்ணியமும் வள்ளன்மையும் மிக்க இறைவன் மகா தூயவன்! கம்பீரமும் கருணையும் கொண்ட இறைவன் மகாதூயவன்! (நூல் - திர்மிதி)*

*118. எனது இறைவனே! நீ எனக்கு உதவி செய்வாயாக! எனக்கு எதிராக மற்றவர்களுக்கு உதவி செய்து விடாதே! இன்னும் எனக்கு உபகாரம் செய்வாயாக! எனக்கு எதிராக மற்றவர்களுக்கு உபகாரம் செய்யாது இருப்பாயாக! இன்னும் எனக்காக சூழ்ச்சி செய்வாயாக! எனக்கு எதிராக சூழ்ச்சி செய்யாதே! எனக்கு நேர்வழி காட்டுவாயாக! நேர்வழியை எனக்கு லேசாக்குவாயாக! எனக்கு அநீதி செய்தவருக்கு எதிராக எனக்கு உதவி செய்வாயாக!*

*இறைவா! என்னை அதிகம் ஞாபகம் செய்பவனாகவும் உன்னை அதிகம் அஞ்சக் கூடியவனாகவும், உனக்கே அடிபணிந்து நடப்பவனாகவும், உனக்கே முற்றிலும் கலப்பற்ற எண்ணமுள்ளவனாகவும், உன்னிடமே அதிகம் இறைஞ்சுபவனாகவும் எந்த காரியத்திலும் உன்பக்கமே திரும்பக் கூடியவனாகவும் ஆக்குவாயாக!*

*இறைவா! எனது தவ்பாவை ஏற்றுக் கொள்வாயாக! எனது பாவங்களைக் கழுவி சுத்தம் செய்வாயாக! எனது துஆக்களை கபூல் செய்வாயாக! எனது ஆதாரத்தை ஈமானை வலுப்படுத்துவாயாக! எனது நாவை சீராக்குவாயாக! எனது உள்ளத்திற்கு நேர்வழி காட்டுவாயாக! எனது நெஞ்சில் உள்ள அசுத்தங்களை நீக்குவாயாக! (நூல் - திர்மிதி)*

## காதிரிய்யா பதிப்பகத்தின் இதர வெளியீடுகள்

1. அல்லாஹ் நம்முடன்
2. நூருன் னூர் - இறைஞானப் பாடநூல்
3. மெய்ஞானப் பாதையிலே
4. ஷிஜ்ரா - ஞான வழித்தொடர்
5. திருநபியின் தினசரி வாழ்க்கை
6. அண்ணல் நபியின் அழகிய வாழ்க்கை
7. திருநபியின் தினசரி துஆக்கள்
8. பைஅத் ஏன்? எதற்கு? எப்படி?
9. தரீக்கத்தின் அவசியம்
10. அல்லாஹ்வை அறிவோம்
11. மவ்லிதும் மீலாதும்
12. ஜகாத் - சிறப்புகளும், சட்டங்களும்
13. குர்பானி - சிறப்புகளும், சட்டங்களும்
14. மனித வாழ்வின் இலட்சியம்
15. தமிழ்பொருளுடன் குர்ஆன், ஹதீஸ் துஆக்கள்
16. இஸ்லாமிய சிறுவர் பாடநூல்
17. நிகாஹும் தலாக்கும்
18. அனைத்து நோய்களுக்கும் செலவில்லா மருந்து
19. மகான்களின் பாதங்களை முத்தமிடலாமா?

## நிரந்தர நன்மைகளை அடைய

1. இந்த நூல்களை மொத்தமாக வாங்கி வழங்கிட விரும்புவோருக்கு குறைந்த விலையில் தரப்படும்

2. திருமணப் பத்திரிக்கையை இந்த நூல்களிலேயே அச்சிட்டுத் தருகிறோம். வாழ்நாளெல்லாம் மணமக்களுக்கு துஆக்கள் கிடைக்கும்.

3. 40ம் நாள் பாத்திஹா போன்ற நிகழ்ச்சிகளுக்கு பெயர் அச்சிட்டுத் தரப்படும்

# ஸலாமத் துஆ மஜ்லிஸ்

- தங்கள் சிரமங்கள் நீங்குவதற்காக இன்று முஸ்லிம்களில் பலரும் போலி சாமியார்கள், மந்திரவாதிகளிடம் செல்கிறார்கள்.
- அவர்களும் சூனியம், ஏவல், பேய், ஜின் என்று கூறி பயம்காட்டி பல இலட்சங்களை வசூல் செய்கிறார்கள்.
- அவ்வாறு ஏமாறாமல் இறைவனிடம் மன்றாடி துஆ செய்து நிவாரணம் பெறுவதற்கு ஸலாமத் துஆ மஜ்லிஸ் ஏற்பாடு செய்துள்ளோம்.
- **எவ்வித கட்டணமும் இல்லை, நேரில் வரத் தேவையில்லை**
- உங்களின் தேவைகளை வாட்ஸ்அப் மூலம் செய்தி அனுப்புங்கள்.
- உஸ்தாதுமார்கள், மாணவர்கள் தினமும் ஓதும் துஆக்களில் உங்கள் பெயர் சேர்த்து கொள்ளப்படும்.
- திருமணம், குழந்தை பிறப்பு, பெயர் சூட்டல், வீடு திறப்பு, கடை திறப்பு, வியாபாரம் போன்ற காரியங்கள் சிறப்பாக நடைபெற துஆச் செய்யப்படும். துஆக்கள் கற்றுத்தரப்படும்.
- உடல் நலமின்மை, சிரமங்கள், மனக்கவலைகள் நீங்கவும் துஆச் செய்வதுடன் குர்ஆன் ஹதீஸ் துஆக்கள் கற்றுத் தரப்படும்.
- இங்கு நடைபெறும் குர்ஆன், புர்தா, மவ்லித், ஸலவாத் மஜ்லிஸ்கள் அனைத்திலும் துஆச் செய்யப்படும்.

## தொடர்புக்கு :

## 9842559023, 9789622980